# சிவத்தைப்பேணிற்றவத்திற் கழகு.

சிவநேசச் செல்வர்காள்! சிவத்தைப்பேணில் தவத்திற்கழகு என்பதைப்பற்றி யடியேன் பேசத்தொடங்குவதை விருப்புடன் கேட்டருள்வீராக.

சிவம் என்பதைக் கல்வி கேள்விகளால் நிரம்பியவான்றோர் பதிபசுபாசங்களோடு கூட்டி யெண்ணுகின்றனர். ஆயினும் அவற்றில் பதியென்பது பசு பாசங்களிரண்டற்கும் மேம்பட்டதாம். எங்ஙனமெனில் அநாதியாகிய வேதங்களும், நாததத்துவமும் நாததத்துவத்தின் அந்தமும் குற்றமற்ற அறிவும் அறியாத அறிவுருவாகி, முதல் நடுவிறுதிகளைக்கடந்த அறிவற்ற ஆனந்த வுருவமான அறிவாகிப் பந்தத்தை நீக்கின பரஞ்சோதியாகிக், குறியுங்குணமும் ஒப்பற்ற வுருவமுமொழிந்து எங்கணும் பரவியிருக்கின்ற பரமசிவமாகி, அறிவுக்கு முற்பட்டதாகி பஞ்ச நிருத்தியங்கட்கும் அப்பாற்பட்டதாகி மனமுதலியவற்றிற்கும் எட்டாதவுருவராகுந் தனது அருளினால் ஐவகையாகிற வுருவத்தையடைய மேலான வின்பமாகி யெல்லாவுயிர்களுக்கும் ஆதாரமாக விருக்கின்ற வொப்பற்ற பொருளாகி, போதலும் வருதலும் நிலைத்திருத்தலும் எதுவுமில்லாத கதியாகித் தனக்கு முற்பட்ட பிறப்பிடமின்றி நின்ற பிறப்பிடமாநிவடிவின்றி நின்ற அருள்வடிவாகி முக்காணங்களேதுவாகவுண்டாகா நின்ற இச்சை யறிவுதொழில் என்பவற்றால் ஒடுக்கம் அநுபவம் அதிகாரமென்று முப்பொருளாகி, யொன்றான உருவமும் அருவமும் உருவருவமும் ஆகிய பக்குவங்கள் பலவுமா?, அந்தகாரரூபமாகிய மலங்களுள்ளே மோகத்தையடைகின்ற பல சீவர்களுக்கும் முத்தியைக் கொடுக்கும் பொருட்டு மலபரிபாகமுண்டாகும்படி அவர்களைக் கடைக்கண்ணால் நோக்கிச் சரீரமெடுக்கக்கொடுத்த அறிவுருவங்களைப்பற்றின விந்துமோகினி மான் என்கிற தத்துவங்களோடு கட்டுண்ணக் கட்டுவித்தும் மநதிர முதலாகிய ஆறு அத்துவாக்களையும் உலகத்திலுள்ள வழிகளையும் முன்னே சொல்லத் தகுந்த கட்டில் சேர்வித்து மாறி மாறி வருகின்ற நால்வகைத் தோற்றத்தினையுடைய எழுவகை பிறப்பினுள் எண்பத்து நான்கு இலட்சம் ஜீவராசிகளுள் நீங்குதற்கரிய கன்மங்களுக்கேற்க காற்றாடியுஞ் சகடக்காலும் போலப் பிறந்துழலும்படி மறைத்து வெவ்விய நரக சுவர்க்க முதலிய மோகங்களெல்லாவற்றையும் நுகர்வித்துப் பருவத்தினால் நன்மையாகிய கரணஞ் சிறிதுண்டாகலுந் தருக்கஞ் செய்தற்குரிய பழைய நூல்களையுடைய பரசமயங்கள் தோறும் அவ்வச்சமய நூலையே நல்ல நூலென்று கைக்கொள்ளும் வண்ணம் ஆராய்ந்து நிலை பெறுவித்து முதனூல்களுட்சொல்லப்பட்ட விரதமுதலான பல மெய்த்தவத்தினது உண்மையோடு சரியை கிரிபை போகங்களையடைவித்து அவைவாயிலாகத் திருவருள் பெருகாநின்ற சாலோக சமீப சாரூபங்களையும் நுகர்வித்து அவற்றினுள்ள நோக்கத்தை நீக்கி நான்குவகையாகிய சத்திநிபாதத்தைக் கொடுக்கும் பொருட்டு இருவினைகளும் ஒத்துவருங் காலத்துள்ளனவாகிப் பந்தமலத்தின் மலபரிபாகம் வருஞ்சமயத்தில் நெடுங்காலம் மலபந்தத்தில் பிணிப்புண்டுழலுதலை நோக்கியருளிக்கெடாமல் அறிவினுக்கறிவாகி அந்த அறிவினுக்கும் எட்டாத நெறியில் பொருந்திய நிலையில் நின்றும் நீங்கிவேறு படாத அருளே திருமேனியாகக்கொண்டு பூமியில் குருவாக வெழுந்தருளித் திருநோக்கால்

பழவினையை நீக்கி யறுபத்தெட்டுடலும் ஏழுநிலங்களும் ஆறு அத்துவாக்களுமொழிய் ஆணவமலமாகிய படலத்தை யரத்து அறிவினாற் காண்டற்கரிய மெய்ஞ்ஞானக் கண்ணைக்காட்டிப் பொருந்திய பதிஞானத்தால் பதிப்பொருளையும் பசுப்பொருவையுங்காட்டி யழியாமல் எங்கும் நிறைந்த பேரின்பமாகிய எவ்விடத்திலும் நீங்குதலின்றி நிறைந்த நிலையையுங் காட்டிப்போதலும் வருதலும் நினைத்தலும் பறத்தலும் பகலுமிரவுமாகிய விவற்றைக்கடந்து அழியாத வின்பத்தை யடைவித்துக் கன்மமலமுடையார்க்கு மலர்க்காரம் போன்ற சண்கள் மூன்றும் நீண்டசடையும்வலிய மழுப்படையும் மான் கன்றும் பகைவரைக் கோபிக்கின்ற பால்விடையின் மீது மின்கொடியையிடப் பக்கத்தில் பொருந்தின ஓர் பவளமலையானது வெள்ளிமலையின் ஊர்ந்துவந்தாற் போன்ற தெய்வவுங்ருவகொண்டு முதிர்ந்த கன்மமலக்கட்டைச் சோதித்துக் கிருபைக் கண்ணால் நோக்கியுள்ளே நிலை பெற்று ஒருமலத்தை புடையவர்களுக்கு இன்பத்தைத் தந்து பெருகி யெழாநின்ற மூன்று அவஸ்தைகளையுங் கழலச்செய்து பெரிய மேலானமுத்தியையடையச்செய்து காணவருகின்றயன் எனது என்று சொல்லப்படுவன அற்றவிடமே திருவடியாகவும் ஞானமே திருவுருவாகவும் இச்சையுங் கிரியையு ஞானமுமே சண்களாகவும் அருளே செங்கைமலராகவும் பூமியே சந்நிதியாகவுங் கொண்டு நிலைபெற்றிருக்கின்ற ஒப்பற்ற சோதியே பெல்லாவுயிர்களுள்ளும் வேற்றுமையில்லாமல் நின்ற பரமசிவமேயாம். இப்பரமசிவமே மேற்காட்டிய சிவமென்னுந் திருநாமத்தை யியைந்ததெனக் கூறற்பாலதாமென்று கொள்க. இத்தகைய மேம்பாட்டினையுடைய சிவத்தைப் பேணுதலே ஏற்றமுடைத்தாமாதலின் “சிவத்தைப்பேணி யென்று பேசியது மென்க".

அன்றியும் இதனைத் தமிழ்வேதம் பாடிய (திருநாவுக்கரசு சுவாமிகள்) "அங்கத்தை மண்ணுக்காக்கி பார்வத்தை யுனக்கே தந்து” என்று: - திருவாய் மலர்ந்தருளியவற்றானு முணரத்தக்கதாம் இனித்தவமானது இம்மை மறுமையின்பங்களையும் பயக்குவிக்கும் தேவேந்திரன் முதலாகிய தேவர்கள் பதவிகளையும் அடைவிக்கச் செய்யும். திரிமூர்த்திகளாகவுஞ் செய்விக்கும் தவமே தன்னையுந்தனக்காதாரத் தலைவனையுந்தெரிவிப்பிக்கும். தவமேயொப்புயர்வில்லாத சிவகதியைப் பெறுவிக்கும். தவமே சாலோக சாமீப சாரூப சாயுச்சியங்களையுங் கொடுப்பிக்கும். ஆகையால் இத்தகைய தவக்தைப்புரிய ஆவல்கொண்டோர் சிவபெருமான் எழுந்தருளியிரா நின்ற விழுமிதாகிய தலங்களிலே சிவபெருமானையே நோக்கிச்செய்யின் சிறப்பினையுடைத்தாம். ஆகவே நம் ஔவைப்பிராட்டியாரும் சிவத்தைப்பேணிற்றவத்திற் கழகெனத் திருவாய் மலர்ந்தருளினரென்க.

ஆ கமலநாத முதலியார்.

சித்தாந்தம் - 1914 ஹு - பிப்ரவரி மீ